உ

சிவமயம்.

# சற்குரு விளக்கம்.

இஃது
நாட்டுக்கோட்டை, நகரத்தார்களாகிய
தனவைசிகர்கள் குருவை முன்னிட்டு
கண்டனூர்
நா. பெ. நா. மு. முத்துராமய்யா
அவர்களால்
இயற்றி

மதுரை வடக்குமாசிவீதி
ஸ்ரீ ராமச்சந்திரவிலாச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.
1912.





சிவமயம்.

# சற்குருவிளக்கம்.

## விநாயகர் துதி.

சற்குருவிளக்கஞ் சாற்றுதற் கன்பா
யற்புதமான பதமதை யருளாச்
சிற்பரமான செல்வவி நாயகன்
பொற்பதமதனைப் போற்றுதல் செய்வாம்.

## கிரியாகுரு.

பூதலமதனிலருள் சிவபத்தி
பொருந்திய குருவடிவாகி
வேதநான்கினுக்கு மெய்ப்பொருளாக
விளங்குடஞ் சாக்கரமதனை
கோதிலாவணிகர் குலமதுவிளங்கக்
கோமளமாகவே யருளு
நாதனையையனடியினைப் பணிந்து
நாடோறும்வணங்கி வாழ்த்திடுவோம்

## ஞானகுரு.

வேதமுடிவான பரசொரூபமுலகுய்ந்திட
மேன்மையாங் கழனிதன்னில்

விகிர்தகுருவாய் முத்துராமலிங்கய்யனென
மெய்யுட னெழுந்தருளியே

போதவடிவாந்துறவு சாமியிருவர்களுடன்
புரிந்தருள் பழனியப்ப

பூசனன் முத்துவீரப்பனொடு
வெள்ளையபூபதி கொளண்ணாமலை

ஆதிவடிவாங் குட்டையடப்பனொடு
நாகப்பனன் புள்ளகருணாநீதி

யாகியசிதம்பரசுவாமி யினனுக்
கிரகமடையுமோர் பொன்னம்பல

நீதமுளசாமியொடு ராமசாமிகள்
திருநெல்லை யருள்பெற்றுநின்ற

நிலையானவீரப்ப ஞானதேசிகனிவர்கள்
நிகழ்பத மிறைஞ்சுவோமே.

உலகின் கண்ணே அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருடார்த்தம் நான்கினுள் மேலாகிய வீட்டை அடைதற்கேது குருவேயாகும். அதற்கு உதாரணம்

## அவிரோதவுந்தியார்.

இருமையுண்மை வல்லோக்கிம்மெய் கொண்டம்மெய்
விரவினுய்ந் தெய்தலேயுந் தீபற
வேலேயாசானே யுற்றுந் தீபற,

குருவில் அநேகவிதமுண்டு. சீடர்களிலும் அநேக விதமுண்டு. வைதீக சைவர்களாகிய தனவைசியர்களு க்கு கிரியா குருவென்றும் ஞானகுருவென்றும் இரண்டு வகை ஆசாரியர்களுண்டு. அவர்களில் கிரியாகுரு வெ ன்பார். பாதரக்குடி சுவாமிகள் கிழாமடத்துச்சுவா மிகள் ஞானகுரு வென்பார் கோவிலூர் சுவாமிகள் இரண்டு விதமாகக் குரு ஏற்பட்டதற்குக் காரணம் யாதெனில் வைதீக சைவர்களானபடியால், வைதீகத் துக்கு கோவிலூர் சுவாமியவர்களும் சைவத்துக்குப் பாதரக்குடி சுவாமியவர்களுமாகும். மேலதிகாரிகளுக்கு வைதீகம் சைவம் எரண்டு பட்சமு முன்னுமிடம் ஒரு பக்ஷமாகும். கீழதிகாரிகளுக்கு வெவ்வேறு ,பக்ஷமாகத் தோன்றும். உதாரணம்.

## திருமந்திரம்.

வேதமோடாகமமெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாதனுரையிவை நாடிலிரண்டந்தம்
பேதமதென்னிற் பெரியோர்க்க பேதமே.

## அவிரோதவுந்தியார்.

பன்னெறியினி கல்விளைக்கும் பலசமயத்
தவருமுந்தி பதத்திற் கீது
நன்னெறியென்றுய்ய வவிரோத வுந்தி
யாடேரனு ருனல் கிறுல்
வென்னெறி தேர்மறை நெறியாகமநெறி
யொன்றெனக் காட்டும் வீரசைவத்
தொன்னெறி மாகேசனெங்கள் சாந்தலிங்க
தேசிறுந் தூயன் ருனே.

வேதம்பல் பக்குவமோர்ந்
தொருவீட்டினுக் கோதும்
பல்லாற்ருனுமுந் தீபற
உண்மை கண்டோர்க்கேகமுந்தீபற.

### இரண்டு குருக்கள் யேற்படுவதற்கு உதாரணம்.

### சைவசமய நெறி.

ஆய்ந்துகிரியாவிதி வீடாயாக் குரவனைவிட்
டாய்ந்தறிக வாய்ந்தவற் காளாய்.

(இருவகை ஆசாரியரையுந் தியானிக்கு முறைமை.)

முந்தியதேசிகன்ருண் முந்திநினை பிந்திநினை
சந்திதொறு மற்றையவன் ருள்.

ஷ கவிகளின் சாரப்படியே தனவைசியர்கள் முத லாவது பாதரக்குடி சுவாமிகளிடத்தில் சிவதீக்ஷையையும், பஞ்சாக்ஷர உபதேசமும் நாம மாத்திரமாய்க் கேட்டுக் கொண்டபின்பு கோவிலூர் சுவாமிகளிடம் ஞானசாஸ் திரம் படித்து ஞானஉபதேசம்பெற்று வருவதுவழக்கம். அங்ஙனம் நடைபெற்று வருவதுபோல சேதுமுதல் இமய பருவதம் வரையில் மற்றஜாதியாருக்கு மடமும் ஆசாரியருமிவ்வளவு வைபவத்துடனிருப்பதாகப் புலப் படவில்லை. திருவாதவூரடிகளுக்குப் பரமசிவம் கயிலை யில் நின்று திருப்பெருந்துறைக்கடியார்களோடெழுந் தருளி அனுக்கிரகித்தது போல தனவைசியர்களுக்குக் கயிலையிலிருந்து பரமசிவம் கழனியம்பதியாகிய கோவி லூரின் கண்முத்து ராமலிங்கஞானதேசிகராக அவதார மாகி யனுக்கிரகம் பண்ணினதாகக் காணப்படுகிறது.

கவி.

கண்ணுதலுஞ் செஞ்சடையுங்
கறைமிடறுந்தான்கறந்து கயிலைநீங்கி
யெண்ணரிய முத்துராமேந்திரனென்னுந்
திருநாமமெங்கு மோங்க
மண்ணுலகிலடியார்க்கு முத்திநிலை
பிரமமென வகுக்கவந்த
வண்ணமளிக்குங் கழனிநகரில்
வாழ்குருபரனை வணங்கிவாழ்வாம்.

ஷை சுவாமிகள் எழுந்தருளிய காலமுதல் தனவைசியர்களுக்குச் சகலவைபவங்களுமுண்டாயின, என்பதற்கு.

மடமுண்டோ, சிவாலயங்கள் மிகுதியுண்டோ, வாசிட்டம் படிப்பதுண்டோ, மனத்துள் ஞானத்திடமுண்டோ, நால்வர் தமிழ்ப்படிப்பாருண்டோ திவ்வியமாமுதார முதற்குணங்களுண்டோ, வீடமுண்டோ னடியர்குழாமிகவு முண்டோ மெய்யறஞ்சத்திரம் விரைப்பூங்காவு முண்டோ வடகயிலைக் கிறைவனெனு முத்துராமவள்ளல் திருக்கழனி நகர் வாராமுன்னம்.

ஷை சுவாமிகளிடத்தில் சீடர்களும் சாதனசதுட்டய சம்பன்னர்களாயிருந்து பாடங்கேட்டு அநேகர் ஞானிகளாயிருந்த பின்பு விதேகமுத்தித்தசையை அடைந்தனர் இதில் பிந்தினப்பட்டதுக்கு சிலர்கள் மிக்க மகத்துவத்துடனிருந்து வந்ததில் இப்போது திருக்களரில் சமாதியடைந்த வீரப்ப ஞானதேசிகரவர்கள் திருவாதவூரடிகளைப் போல நடராஜ சன்னிதானத்தில் ரதாரூடராய் யெழுந்தருளிப கடவுளின் முன்பாக சகல ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்க விதேகமுத்தியான பேரின்ப வாழ்வை யடைந்ததும் யாவருக்கும் தெரிந்த விஷயமே. ஷை ஆதீனத்தை அடைந்து குருவினிடத்தில் ஞானுனுக்கிரம் பெறுகிற தவமே தவம். இதற்கு உதாரணம்,

திருவாய்க்கத் தவம்புரிந்தோன் அளகைநகர்க்கி றையவனாந் திகழுங்கற்ப தருவாய்க்கத் தவம்புரிந் தோன் வெள்ளத்தி ஒருமுது சிற்றுங்கப் பெற்றேன், கருவாய்க்கமறம் புரியுங் கயவர்கண்ணுக் கினியாத கருணைவெள்ளக் குருவாய்க்கத் தவம்புரிந்தோர் கமுனி நகருற்ற திருக்கூட்டத்தாரே.

ஷெமுத்தாராமலிங்க ஞானதேசிகரவர்கள் பாதரக் குடிசுவாமிகளிடத்தில் சாதியாசாரப்படி சிவதிக்ஷையும் பஞ்சாக்ஷர உபதேசமும் பெற்றுக்கொண்டு பாதரக்குடி சுவாமி அவர்கள்பேரில் பத்துக்கவி பாடியனுப்பினார் கள். அவைகளில் முதலாவது கவி.

அஞ்சக்கரந்தன்னை யெஞ்சாது சிந்திக்கு
மவர்கட்கோ ரல்லலில்லை
யயனும்படைக்க நினையான் மறலிகிட்டுகில
னடையவேண்டுவது மில்லை
விஞ்சுத்தனம் பூமிமைந்தரொடு சுற்றமகல்
விடுதுணை யென்னவேண்டார்
வீணனவாறுறு மெண்ணார்கள் சொன்னாலும்
மேலென்று சித்தம்வையார்
மிஞ்சுற்றஇந்த உபதேசந் தனைப்பெற்றோர்
வெகுகாலம் வாழ்ந்திருப்பர்.

மெய்யனே துய்யனே யையனே யப்பனே
வேதாந்தமோன குருவே
மஞ்சுபதிக கனமென நிறையுஞ்சிதாகாச
வடிவமே யெமதுகுருவே
வணிசர்குலவோஷதி கடழைய உபதேசமழை
மாருதுபொழியு முகிலே.

ஷ கவிகளின் கடைசி மகுடமானது வணிகர்குல ஓஷதிகள் தழைய உபதேசமழை மாறாது பொழியு முகிலே யென்ற வாக்கியம் மிக்க மகத்துவ முற்றது அதாவது மேகமானது பெருங்கருணையினால் கைம்மா றின்றி, உவட்டு நிலமென்றும், நல்லநிலமென்றும் நோக்காது. எல்லா நிலத்திலும் மழையை வருஷித்து பயிர் களைத் தழையவைப்பதுபோல பாதரச்குடி சுவாமிக ளும் பக்குவம் அபக்குவம் பாராது பஞ்சாக்ஷரமாகிய மழையைப் பொழிந்து வைசியர்களாகிய பயிர்களைத் தழைத்தோங்கும்படி செய்துவந்ததாக வாக்கியம் யேற் பட்டிருப்பதில் இப்போதிருக்கிற சுவாமியவர்கள் அந் தப்படியில்லாது நூலில் சொல்லுகிற ஆசாரத்தையும், மகத்துவத்தையும், யோக்கியதையுங் கொஞ்சமும் உற் றுநோக்காது சிலர்களிடத்தில் மனஸ்தாபத்தை உண்டு பண்ணிக்கொண்டு கோர்ட்டில் வாதி பிரதிவாதிகளாக யிருந்து விவகாரம்பண்ணிவருவது யாதுகாரணமென்று மதிக்கக் கூடவில்லை.

## ஆசாரியர்களுக்கு விதி (ஞானசோமனம்)

இந்த உலகம் புகழ்ந்தாலென்ன, எல்லோருங்கூடி யிகழ்ந்தாலென்ன அறிவு தானென்றிருந்தவர்க்கு அதிகங் குறைச்சலில்லை கண்டாய்.

என்று நூல் கூறுகின்றது மேசப்போன்ற தன்மையுள்ளசுவாமியவர்கள் இப்போது காலவேற்றுமையினால் சீடர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து நாங்கள் தெரிந்து செய்தாலும் தெரியாது செய்தாலும் மன்னித்து அநுக்கிரகம் செய்யவேணுமென்று நமஸ்கரித்து நிற்க சுவாமியவர்கள் தயவுசெய்து அநுகூலமானவார்த்தை இயம்பாது விருத்தமான வார்த்தைகள்கூறினது பற்றித்தெய்வத்தையே நோக வேண்டியிருக்கிறது. நகரத்தாரவர்களின் நன்மை நாடுவோன்பத்திரிகையில் சண்டபாடல்.

## திருவிளையாடல்.

ஈசனுக்கிழைத்தகுற்றம் தேசிகனெண்ணித் தீர்க்குந்
தேசிகர்கிழைத்தகுற்றங் குரவனே தீர்ப்பதன்றிப்
பேசுவதெவனேதன்பாற் பிழைத்தகாரணத்தால் வந்த
வாசவன்பழியைந் தீர்ப்பான் குரவனேவழியுங்கூற

ஷ கவியைப் பத்திரிகை மூலமாய்ச் சுவாமியவர்கள் பார்த்திருந்தும் நல்லநோக்கம் சொள்ளாது விருத்தமாய்ப் பேசினதினால் பாடலின் விஷயம் இவர்களுக்கு உபமித்தது பொருந்தாது.

## வைராக்கியசதகம்.

அறியாமையிற் கிழவர்பல்பிழையாற்றினுலுங்
குறியாதருள்செய்வதுமேலவர் கொள்கையன்றோ.

## வாக்கியம்.

பிடித்தது பிடித்துக் காட்டும் பேதைமை பெரியோர்க் கன்றோ யென்றிருக்கிறது. இதுவும் தவிர ஷை பத்திரிக்கையில் கண்டகவி.

பையராவணிந் தவேணிப் பகவனேயனைய தங்களையுனும் வியாழப்புத் தேளாயினடந் யடைந் தானுகச் செய்பதாள் வழிபாடின்றித் தேவர் சோனிநந் தானந்தோகைபலார் மயலிற் பட்டோர் தமக் கொருமதியுண்டாமோ.

வியாழபகவான்வந்தவுடன் தேவேந்திரன் வழிபடாது பெருமிதமாயிருந்ததை நோக்கி உடனே திருமபி விட்டதே யல்லாது விவகாரத்திற்கு நிற்க வில்லே. அவருடைய பொறுமையானது தேவேந்திரனுக்குக் குறைவு நேர்ந்தது அந்த உபமான மானதும் இப்போது இருக்கிற சுவாமிகளுக்கும் வைசியர்களில் சிலர்களுக்கும் நேர்ந்த மனஸ் தாபத்துக்கும் சொல்லுவது பொருந்தாது. சுவாமிகள் எதிர்த்து விவகாரம் பண்ணுது சும்மாயிருந்தால் பொருந்தும். விவகாரத்திலும்

யேது சொரூபம் காரியம். அவதி பலன் வரையில் பார்த்து விடுவதாய் அவிவேகிகட்கு ஒப்பாக நின்றது கூடாது. ஆசாரியர்கள் விருத்தமாய் நடந்தால் சீடர்கள் விலகிக் கொள்வது சாஸ்திரத்தினது அபிப்பிராயம்.

## பிரபோத சந்திரோதயம்.

குருவரச னன்னைபிதாத் தம்முனெனக்
கொளத்தகுமைங் குரவரேனும
பெருமிதங்கொண்டடுக்குமடா திது வென்ப
தணராமற் பிழைசெய்வரேற்
றருமநெறியுணர்ந்தமிக்கோ ரவரவர்க்குத்
தக்கதக்க தண்டஞ்செய்தன்
மருவுதிரைக் கடலுடுத்தமாநிலத்திற்
பண்டைமறு வசனமன்றே.

கவியின் தாற்பரியப்படி சீடர்கள் சுவாமிகளிடத்தில்முறணாது இதமானவழி பார்க்கவேண்டிய தவசியம். இதமான வழிபாராது சுவாமிகளிடத்தில் முரணுவது ஒரு விதத்திலும் சுகப்படாது. உதாரணம்.

## (ஒழிவிலொடுக்கம்)

கிரியைக் கிளைத்துவந்து கேட்டவர்க்குச் சும்மா
இரியச் சுகம்விளைத்த சீமான்—குருவன்றிச்

சற்றே பதைப்பைத் தரினுஞ் சகம்படைக்கக்
கற்றானுங் காலனுமாங் காண்.

என்று கவியின் கருத்திருப்பதால் சலனப் படுத்தா நின்ற ஆசாரியரிடத்தில் சலனப்படுவது நியாயமன்று ஆசாரியர் வாக்கியமும் சாஸ்திரமும் சீடனுடைய சுவானுபவமும் ஒத்திருக்கவேண்டும். உதாரணம்

## அவிரோதவுந்தியார்.

ஆன்றஆசான் சொன்மெய்நூல் தன்னனுபவ மூன்று
மொத் தாங்தெளிவுந் தீபர முத்திநெறியதென்றுந் தீபற

## வாசிட்டம்.

ஆசான் மொழியானூற் பொருளாலன்றிப் பெறவுமரிதாகுந் தேசார் குருநூன் மாணுக்கன் சிறக்களிம் மூவருங் கூடிற்பாசாதீதப்பரமெய்தும்பன்னுனிங்காவிக் கூட்டம் எசாவுணர்வைத்தரும் பசற்போதெல்லாத் தொழிலுங் தருவதுபோல் கோவிலூரின் கண்ணே மேற்கூறியகவிகளின் சாரப்படி சுருதிகுரு சுவானுபவமும் ஜீவகாருண்யம் ஈஸ்வரபக்தி பாசவைராக்கியம் பிரமஞானம் சாதுசங்கமும் சாஸ்த்திர ஆராச்சியும் க்ஷேத்ர மகிமையும் திருப்பணியுட்கும் மூர்த்திகள் தெரிசனமும் பாடசாலை வித்தியாசாலை முதலான சகல வைபவங்களும் பொருந்திதனவைசியர்கள் முதலிய அடியார்கள்

பாலுஞ்சோறும் உண்டுவேதாந்த பாடங்களைக்கேட்டு பேரானந்தத்தைஅடைந்து சர்வசுதந்தர பாத்தியஸ்தராய் வருவதில் இப்போது கொஞ்சக்காலமாய் வைசியர்கள் படிப்பு அதிகமில்லா திருபதற்குக்காரணம் எதுவென்று யோசிக்குமளவில் பாதரக்குடி சுவாமிகளிடத்தில் தீக்ஷையும் உபதேசமும் பெற்றுக்கொள்ளாது சுணங்சி யிருப்பதே காரணமென்று எண்ணபடுகிறது, உதாரணம்.

## தேவாரம்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப் பொருளாவது
நாத நாம நமச்சி வாயவே.

ஷை கவியின் சாரப்படி பஞ்சாக்ஷர உபதேசம் பெற்றுக்கொள்வது நன்மாக்கத்துக்குக் காரணமாயிருப்பதால் ஒரு கணநேரமாவது தாமசியாமல் தீக்ஷைபெற்றுக்கொள்ள வேண்டியது அவசியம். சிலர்கள் நோக்கப்படி இப்போது விரோதம் பாராட்டிவருகிற சுவாமிகளிடத்தில் உபதேசம் கேட்டுக்கொள்ளலாம். அதற்கு முன்னேற்பட்டிருக்கிற விரோதந்த விரசாஸ்திர விரோதமுமிருக்கின்றது.

முதலாவது சாஸ்திர விருத்தமும் இரண்டாவது வேகார விருத்தமுங் கொண்டிருப்பதால் சித்தமானது விவறுபட்டிருக்கும். வேறுபட்டிருக்கிற சுவாமிகளிடத்தில் உபதேசங் கேட்டுக்கொள்வது விரோதத்தை உண்டாகிறுலும் உண்டாக்கும். அதை நகரத்தாரவர்கள்க் கவனிக்கவேண்டும்? உதாரணம்.

## திருவிளையாடல்.

நன்மை நாடுவோன் பத்திரிக்கையில் கண்ட
பாடலுக்குப் பின்பாடல்.

கைதவச்குரவன் மாயங்கருதிலன் வெள்ளியொன்று
செய்திடலடிகளென்னத் தேவர்சட் காக்கங்கூறி
வெய்தழல்வளர்ப்பானுள்ளம்வேறுபட்டவுணர்க்கில்லா
மும்திறநினைந்து வேட்டான்றனக்குமேலுறவதோரான்

வாக்கினுன் மனத்தால் வேருய்மகஞ்
செய்வான் செயலேயாக்கை
நோக்கினுனேதி தன்னு னேக்கி
னுன்குலிச வேலாற்
ருக்கினுன் றலைகண்மூன்றுந்
தனித்தனி பறவையாகப்
போக்கினுனலகை வாயிற் புகட்டினுன்
புலவுச் சோரி.

தெற்றெனப் பிரமபாவஞ் சீறிவந்த
மார் வேந்தைப்
பற்றலுமதனைத் தீர்ப்பான் பண்ணவர்
மரமேன் மண்மேற்
பொற்றொடியார் பேனீர்மேல் வேண்டினர்
புகுத்த லோடு
மற்றவரிஃதியாந் தீர்க்கும் வண்ணம்
யாதென்ன விண்ணோர்.

அப்பிடை நுரையாய் மண்ணிலருவருப்பு
வராயம் பொற்
செப்பிளங் கொங்கையார் பாற்றீண்டு
தற்கரிய பூப்பாய்க்
கப்பினர் மரத்திற்காலும் பயினதாய்க்
கழிக வென்று
ரிப்பழி சுமந்தவெங்கட் கென்னல
மென்றார் பின்னும்.

தேவேந்திரனைப் போலத் தீர்க்கக்கொள்ளும்படியான வல்லமை நமக்குண்டானால் கேட்டுக்கொள்ளலாம் பாதகமில்லை. சிலர்கள் வீழியரென்றும் சோழியரென்றும் விவகாரம் சொல்லுவது பொருந்தாது. சாஸ்திரத்தில் வைசியர்கள் தங்களுக்கு மேற்பட்ட பிராமணர்களிடத்தில் அனுக்கிரகம் பெற்றுக்கொள்ள வேணு

மென்றும் அல்லது தங்கள் தம்மள் சாதியாரிடத்தில் பெற்றுக்கொள்ள வேணுமென்றும் தங்களுக்குக் கீழ்ப் பட்ட சூத்திரரிடத்தில் பெற்றுக்கொள்ளக்கூடாதென் றும் சாஸ்திர அபிப்பிராயமிருக்கிறதே யல்லாமல் சாதி க்குள் வகுப்பைப் பிரித்துச் சொல்லவில்லை. ஜாதியை யும் ஆசார அனுஷ்டானத்தையும் சாஸ்திரஞானத்தை யும் ஒழுக்கத்தையும் பற்றிப் பிரதானமாகச் சொல்லு கின்றதே யொழிய வேறில்லை இதுவும் தவிர நமது சுவாமிகளுக்கு அனுக்கிரகம் புரியாநின்ற சிதம்பரம் அகோராசிவாசாரியார் மடத்துச் சுவாமிகள் விழியராக வும் முந்தின பட்டத்துக்கிருந்த சுவாமிகளில் சிலர்கள் விழியராகவும் இருந்ததாக ஏற்படுவதினால் அதைப்பற் றி சொல்வதில் பயனில்லை.

ஆசாரியராக கொள்ளவேண்டியது.

## சைவசமயநெறி.

அந்தணரேயந் தணர்க்குத் தேசிகராவரொழிந்தார்
தந்தொகைக்குமந் தணரேதாம்

மன்னரொரு மூவர்க்கிருவர்க்கே வாழ்வசியர்
பின்னவராந் பிந்தினற்கே பேறு

இந்தமுறை மற்றையவர்க்கு மேற்குமிதுதன்னை
சிந்தையல வென்றேறிணை

அந்தணர்முன் மூவர்க்கு மாமறையு மாகமமுஞ்
சந்தையுற வோதுமது சால்பு.
மற்றையவர் சைவாக மத்தை மதித்துணர்வா
ருற்றபுரா ணாதி விதமும்.

அவரவர்க ளுக்கப்படி விவகாரம் பேசாது நா லின்பேரிற் பேசவேணும்.

(திருவள்ளுவர்)

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்

மற்ற மடங்களிலும் ஒரே வகுப்பில் பட்டம் ஏற்படவில்லை. நாயனார் நூற்கருத்தின்படி நடந்தால் விவகாரமேற்படாது. ஆதியில் ஷை சுவாமிகள் நமக்கு விரோதமான எண்ணத்தைக் கொண்ட அப்போதே அதற்குத் தக்க இதமான வேலையைச் செய்யாதுவிட்டனர்.

"எண்ணித் துணிவது கருமந் துணிந்தபின் எண்ணுவ திழுக்கென் றாகிவிட்டது"

நகரத்தாரவர்கள் மிக முயன்று தீக்ஷையும் உபதேசமும் சீக்கிரம் பெற்றுக்கொள்ளும்படி யேற்பாடு செய்யவேண்டியது. சுணங்கினதினால் சிலர்கள் சூத்திராகிய சைவர்களிடத்தில் தீக்ஷையும் உபதேசமும் பெற்றுக் கொண்டதாகக் கேள்வி; அப்படிக் கேட்டுக்கொள்வது சாஸ்திர விரோதம்.

## விரோதமென்பதற்கு உதாரணம்.

(பாகவதம்.)

செயலருந் துயருற்றாலுஞ் செயத்தகாச்
செயல்க ளாகா
இயல்பலா வழியா லுண்ண விராகுவை
யமுதங் கொன்ற
தயலெலாம் வசமாயாபத் தனைத்தும்போ
யென்று நன்று
முயலுநற் குணங்களாலே மொய்புக
ழெய்தி னோர்க்கே.

சைவர்களென்று ஒரு ஜாதி கிடையாது. இந்நாட்டில் மாமிசம் சாப்பிடாத நற்செய்கையினாலே சூத்திரர்கள் சைவர்களாய் வழங்கப்பெற்றார்கள். சைவர்களென்பதற்கு,

உதாரணம். (சைவசமயநெறி)

ஐயந்திரிபு மறவாய்ந் தார்பொருண் மூன்றுஞ்
சைவரமலன் சொற்றரித்து.

வேதாகமங்களை யுணர்ந்து பசுபதி பாச இலக்கணந் தெரிந்தால் சைவர்களென்றாகும். அப்படிக்கன்றி மற்றவர்கள் உபதேசம் செய்யும்படியான சைவர்களாக மாட்டார்கள். அவர்களிடத்தில் உபதேசமும் பெற்றுக்கொள்ளக்கூடாது.

நாலுவகைச் சாதியாருக்கும் உரித்தான தீக்ஷை முதலியவற்றிற்கு சுலோகப்படி அர்த்தம்.

(சித்தாந்த சாராவளி)

இவ்விடத்து ஜேஷ்ட குரு என்றதினாலே சகல வர்ணங்களுக்கும் தீக்ஷை செய்வதிலும், பிரதிஷ்டை மஹோற்சவம், ஸ்தபநம், ப்ரோக்ஷணம், ப்ராயச்சித்தம், அபிஷேகம், மந்திர வியாக்கியானம் இவை ஸ்வார்த்தத்திலும் செய்ய வல்லவனாவான். சகல தேவ பூஜையிலும் பிராமணன் முதலான மூன்று வர்ணத்தாரும் தீக்ஷையிலும் ஸ்தாபநத்திலும் யோக்கியராவார். பிராமணன க்ஷத்திரியன் முதலான மூவருக்கும் க்ஷத்திரியன் வைசிய சூத்திர ரிருவருக்கும், வைசியன் வைசிய சூத்திராரிருவருக்கும், சூத்திரன் தத்தஞ் ஜாதியானுக்கும் தீக்ஷை செய்வதில் யோக்கியனாவான் ஸ்வார்த்த யாகத்திலும் சலலிங்க பிரதிஷ்டையிலும் பிராமணாதி மூன்று வர்ணத்தாரும் யோக்கியராவார். சூத்திரனும் நைஷ்டிகனாயிருப்பானாகில் ஸ்வார்த்த தலலிங்கப் பிரதிஷ்டையிலும் சூத்திர தீக்ஷையிலும் நாத சகிதமான சகல மந்திரங்களிலும் சிவஞானத்திலும் யோக்கியனாவான்.

கிரகஸ்தனாகிய சூத்திரனுக்கு நித்தியேஷ்டியிலே மாத்திரந்தான் யோக்கியதை உண்டு. அதிலும் நாதமில்லாத மந்திரங்களே சொல்லவேண்டும்சூத்திரனாகு அபிஷேக யோக்கியதை ஒருபோதும் இல்லை. ஸ்தக்கணாதிகளில் யோக்கியதை இல்லை யென்பதற்குக்கேழ்க்ப

வேண்டியதில்லை. என்றாகமப் பிரமாணங்கள் இருக்கின்றன. மேற்கண்ட சூத்திரர்களாகிய சைவர்களை முன்னிட்டுக் குருபூசை நடத்துவது சரியல்லவென்று குருபூசையிலுண்டாகிற சண்டைவிலகும் பொருட்டு முன் தனவைசிய வைதிக சைவாநுஷ்டானவிளக்கமென்னும், நூலில் சொல்லியிருக்கிறேன். அதைச்சிலர்கள் கவனித்துமாற்றி பிராம்மணர்களைக் கொண்டு நடத்தி வருகிறார்கள். சிலர்கள் மாற்றவில்லை; மாற்றுதற்குக் காரணம் நான் சொன்னது பிசகென்று நினைத்தார்களோ, அல்லது இதுவரையில் நடத்திவந்ததை மாற்றினால் இளப்பமாய் சனங்கள் நினைப்பார்களென்று மாற்றவில்லையோ தெரியவில்லை. அறிவுள்ளவர்கள் இனிமேலாவது ஞாயத்தைஉணர்ந்து பிராம்மணர்களைக்கொண்டு சமையல் செய்வித்து ஞானமுள்ள அடியார்களை முதன்மையோராகச்செய்தால் ரொம்பநன்மையாயிருக்கும். புராணத்தின் கருத்தை உரைவேண்டியது. உதாரணம்.

(திருஞான சம்மந்தமூர்த்திநாயனார் புராணம்.)

மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்மதிசூடு
மண்ணலா ரடியார் தமையமுது செய்வித்தல்
கண்ணினாலவர் நல்விழாப் பொலிவு கண்டார்த
லுண்மையா மெனிலுலகர் முன்வருகென வுரைப்பார்.

(திருநாவுக்கரசு நாயனார் புராணம்.)

அல்லார்கண் டத்தண்டர் பிரானருளாற்
பெற்ற படிக்காசு

பல்லாறியன்ற வளம்பெருசப் பரமனடி
யாரா ளுர்க

ளொல்லாமெய்தி யுண்கவென விரண்டுபொழுதும்
பறை நிகழ்த்திச்

சொல்லாற்சாற்றிச் சோறிட்டார் துயர்கூர்
வறுமை தொலைத்திட்டார்.

(பிரபுலிங்கலீலை)

சாதியுங் குறியுநீத்துச் சரணரைச் சிவனே யென்று
பாதபங் கயமிறைஞ்சிப் பத்திசெய் குவனன் னந்தி[பும்
தீதறு சுவைத்தீங் கண்டாற் செய்தசெங் கரும்பும்வேம்
பேதமொன் றுருமற்சாதி பெயர்விடுத் தறிதலே போல்

சூத்திரரியல்பு.

(திருவிளையாடல்)

வழுக்கறு வாய்மை மாண்புங் கங்கைதன்
மரபின் வந்த

விழுக்குடிப் பிறப்பு மூவ ரேவிய
வினைகேட் டாற்று

மொழுக்கமு மமைச்சாய் வேந்தர்க் குறுதிசூழ்
வினையுங் குன்று

விழுக்கறு மேழிச் செல்வர் வளமறு
கியம்ப லுற்றும்.

(பகவத்கீதை)

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிபம்
வழுவறச் செய்தொழில் வணிகர் வாழ்க்கையாம்
பழுதற விவர்களைப் பாது காத்தலே
விழுமிய தொழில்கள் வேளாளர்க் கென்பவே.

(மனுதர்மசாஸ்திரம்)

தொண்ணூற்றோராவது சுலோகத்தின் அருத்தம்: சூத்திரனுக்கு. இந்த மூன்று வர்ணத்தாருக்கும், பொறாமையின்றிப் பணிசெய்வதை முக்கியமான தருமமாக ஏற்படுத்தினர். இதனால் அவனுக்குத் தானமுதலியவையு முண்டென்று தோன்றுகின்றது. முக்கியவிஷயம் பஞ்சாக்ஷர உபதேசம் பெறவேண்டியது. அதற்கு ஆசாரியரவர்களும் நமது ஆண்டவன் சொன்னபடிக்குச் சகல சற்குணமும் கல்வியு நிறைந்தவர்களாகயிருந்து அனுக்கிரகம் பண்ணி க்ஷேமத்தைத் தரும்படி இயற்றவேண்டியது.

(ஆண்டவர் வாக்கு.)

அல்லலானது விலக்குபே ரன்றனத்திலு
மதிகநிதி நீங்குபொழுது
மாகாத பொய்யுரைகள் சொல்லா திருத்தலா
லயோத்திநக ரதிபனெனலாந்

தொல்லைவினை ரூபமாய் வருபஞ்ச கோசநகர்
துாளாய்த் தகர்த்த வநனுற்
சொல்லரிய ஞானமத யானையென் றியாவருந்
துதித்துப் புகழ்ந்து சொல்லலாம்
நல்லசிசு பொல்லாத சேயென்று தாயுமிரு
நாட்டந் தவிர்த் தருள்வபோ
னுடுமுல குபிரைநீ சமமா யளித்தலா
னன்மையுறு மன்னை யெனலாம்
வல்லியென துடலாவி நிதிநா னளித்திலேன்
வலியவேற் றுண்ட குருவே
வணிகர்குல ஓஷதிக டழையவுப தேசமழை
மாறாது பொழியு முகிலே.

உபதேசம்பெறுமலிருப்பது பிழையென்பதற்கு

பட்டணத்தார்.

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங்
கசிந் துருகி
நில்லாப் பிழையு நினையாப் பிழையுநின்
னஞ் செழுத்தைச்
சொல்லாப் பிழையுந் துதியாப் பிழையுந்
தொழாப் பிழையு
மெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி
யேகம்ப னே.

## ஆசாரியரிலக்கணம்.
### (திருமந்திரம்)

நாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
நாடந்து தன்னை யறியத் தரவல்லோன்
றூடந்து தத்துவா தீதத்துச் சார்சிவன்
றூடந்து பாசந் தணிக்கு மவன்சத்தே. (1)

தவிரவைத் தான்வினை தன்னடி யார்கோ
டவிரவைத் தான்சிரத் தோடுதன் பாதந்
தவிரவைத் தான்மன் றாதுவர் கூட்டந்
தவிரவைத் தான்பிற விந்துயர் தானே. (2)

கறுத்த விரும்பே கனக மதானுன்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தவப் போதே குருவருள் பெற்றால்
மறித்துப் பிறவியில் வந்தணு காரே. (3)

பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையு
நேசத்து நாடி மலமற நீக்குவோ
ராசற்ற சற்குரு வாவோ ரறிவற்றுப்
பூசற் கிரங்குவோர் போதக் குருவென்றே. (4)

நேயத்தே நிற்கு நிமலன் மலமற்ற
நேயத்தை நல்கவல் லோனித்தன் சுத்தனே
யாயத்து வாதந் துவமுணர்ந் தாங்கற்ற
நேயர்க் களிப்பவ னீடுங் குரவனே. (5)

பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசைதரும் பொன்வகை யாகுமா போற்
குரு பரிசித்த குவலய மெல்லாந்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே. (6)

தானே யெனநின்ற சற்குரு சந்நிதி
தானே யெனநின்ற தன்மை வெளிப்படிற்
றானே தனைப்பெற வேண்டுஞ் சதிர்பெற
வானே யெனநினைந் தோர்ந்து கொளுன்னிலே. (7)

## அனுசாரிய லிலக்கணம்.

(திருமந்திரம்)

உணர்வொன் றிலாமூட னுண்மையோ ராதோன்
கணுவின்றி வேதா கமநெறி காணான்
பணிவொன் றிலாதோன் பரநிந்தை செய்வோ
னணுவின் குணத்தோன் சற்குரு வாமே. (க)

மந்திர தந்திர மாயோக ஞானமும்
பந்தமும் வீடுந் தெரிசித்துப் பார்ப்பவர்
சிந்தனை செய்யாத் தெளிவியா தாண்பொருட்
டந்தக ராவோர் சற்குரு வாமே. (உ)

ஆமாற்றிப் பாதோன் மூடனதி மூடன்
காமாதி நீங்காக் கலதி கலதிகட்
காமாற சந்தறி விப்போனறி விலோன்
கோமா னலன சத்தாகுங் குரவனே. (௫)

கற்பயா கற்பங்க ணீக்காழூம் கற்பித்தாற்
றற்பாவங் குன்றுந் தனக்கே பகையாகு
நற்பா லரசுக்கு நாட்டுக்குங் கேடென்றே
முற்பாலே நந்தி மொழிந்து வைத்தானே. (௬)

குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
முாளும் பழங்குழி வீழ்வரா முன்பின்
குருடரும் வீழ்வரா முன்பின் னறமே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே. (௭)

(வேதாந்த சூடாமணி)

சாதகர்க ளாஞ்சீடர் பேதத் தாற்குரவர்
தாமும் போதககுருவே முதலாக விருநாற்
பேதமடை குவரவருட் போதகன் முன்னூலிற்
பெரும்பொருள் கூறிடு பவன்றத்து வந்திகழ்த்துபவனே

வேதகனல் வசியாதி யாலிம்மை யின்பம்
வெந்துயரங் குதவுமவ னிசிதகுரு வறத்தைப்
போதகஞ்செய் திருமைபினு மின்பமருள் பவனே
புகழ்தருகா மியகுருவென் றறைகுவர்மு தறிஞர். (௧)

ஞாசகனும் விவேகத்தாற் சமைமுதலாங் குணங்க
டொகுப்பவன்பொய் விடயமென வான்மவிருப் பருள்
வாசகனுஞ் சிவசீவ ரயிக்கியஞா னத்தை [வோன்
வழங்குமவன் காரகனே யந்தவிர்த்து நிலைத்த

வாசகனு முத்தியருள் பவன்விகித குருவா
மதிகாரி களாகு மெனமுன்னர்க் கூறு
நேசமுறு சீடர்தம்மு ளொருவன் முத்தாப
நெருப்பினால் வெந்துசிந்தா குலமுடைய னுகி. (உ)

நானுரிப் பவமெனக்கு வந்தவா றென்கொ
னசிப்பதெவ ராலெனவாய்ந் தலர்கரங்கொண் டேகி
யானுநற் கல்வியறி வடக்கம்வயி ராக
மாதியாங் குணமுடைச்சற் குருவையடைந் தெதிர்மண்

ணூனுரப் பணிந்தெழுந்தன் பாற்கரங்கள் குவித்தே
யுறவமுத்தி யருட்குருவே யென்பாசத் தொழிவு
தானுமெத் திறத்தினு லெனவினவல் சீடன்
றனதுவிதி வத்துபசன் னத்துவமா மன்றே. (௩)

அனைய வனத்திகாரந் தெரிந்தருளா னேக்கி
யஞ்சலோம்பென் றபயகரஞ் சிரத்தி லிருத்திப்
புனையவருஞ் சுருதியுத்தி யாலவனத ஞன்ம
புத்தியினை யொழித்தத்தா தான்மியவாக் கியத்தா
னினையலரு மொருபிரம நீயேயென் றுள்ள
நிலையையுணர்த் துதல்குரவ னுபதேச மாகு

மினையவுப தேசமுறை யுந்தேசத் துடனே
யிலக்கணஞ்சோதனையெனுமுன் றினையுமுடைத்தாமால்

அறியவுணர்த் துறுபொருளை நாமமாத் திரத்தா
லறைந்திடுத லுந்தேசமாங்களசம் பளமாங்
குறியுடைய தானெனல்போ லப்பொருளிற் சிறந்த
குறியுரைத்த லிலக்கணமவ் விலக்கியமாம் பொருளிற்

செறிவுறுமவ் விலக்கணமுண் டோவிலையோ வென்னத்
தெரிந்திடுதல் பரிட்சையோர் பொருளறிந்து பெறற்குப்
பொறியுறல்செய் காட்சியா மளவைமுத லாசப்
பொருந்துபிர மாணங்க ளெட்டுளவா மன்றே. (ரு)

(கைவல்லியம்)

நித்திய வநித்தியபங்க ணிண்ணயந்
தெரி விவேகம்
மத்திய விசுபரங்கள் வருபோகந்
களி னிராசை
சத்திய முரைக்கவேண்டுஞ் சமாதியென்
றுறு கூட்டம்
முத்தியை விரும்புமிச்சை யொழிவாச
தனமிந் நான்கே. (க)

சாதன மின்றியொன்றைச் சாதிப்பா
ருலகி லில்லை

ஆதலா லிந்தநான்கு மடைந்தவர்க்
கறி வுண்டாகும்
நூதன விவேகியுள்ள நுழையாது
நுழைபு மாகில்
பூதசன் மங்கள்கோடி புனிதனும்
புருட னாமே. (உ)

இவனதி காரியானே னிந்திரி
யங்க ளாலும்
புவனதெய் வங்களாலும் பூதபௌ
திகங்க ளாலும்
தவனமுன் றடைந்துவெய்யிற் சகித்திடாப்
புழுப்போல் வெம்பிப்
பவமறு ஞானதீர்த்தம் படிந்திடப்
பதறி னானே. (ங)

ஆனபின் மனைவிமக்க ளர்த்தவே
டணைகண் மூன்றில்
கானவர் வலையிற்பட்டுக் கைதப்பி
யோடு மான்போல்
போனவன் வெறுங்கையோடே போகாத
வண்ணஞ் சென்று
ஞானசற் குருவைக் கண்டு
நன்றுக வணங்கினானே. (ச)

வணங்கிநின் றழுதுசொல்வான் மாயவாழ்
வெனுஞ்சோ கத்தால்
உணங்கினே னையனே யென்னுள்ளமே
குளிரும் வண்ணம்
பிணங்கிய கோசபாசப் பின்னலைச்
சின்ன மாக்கி
இணங்கிய குருவேயென்னை யிரட்சித்தல்
வேண்டு மென்றான். (ரு)

அன்னதன் சிசுவையை யனுமைமீன்
பறவை போலத்
தன்னகங் கருதிநோக்கித் தடவிச்சன்
னிதி யிருத்தி
உன்னது பிறவிமாற்று முபாயமொன்
றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பாயாகிற் றொடர்பவந்
தொலையு மென்றான். (சு)

தொடர்பவந் தொலையுமென்று சொன்னதைக்
கேட்ட போதே
தடமடு மூழ்கினான்போற் சரீரமுங்
குளிர்ந்துள் ளாறி
அடருமன் பொழுகுமாபோ லானந்த
பாஷ்பங் காட்டி

மடன்மலர்ப் பாதமீண்டும் வணங்கிநின்
றீது சொல்வான். (எ)

சொன்னது கேட்கமாட்டாத் தொண்டனு
னுலுஞ் சுவாமி
நின்னது கருணையாலே நீரெனை
யாள லாமே
உன்னது பிறவியாற்று முபாயமொன்
றண்டேன் றீரே
இன்னதென் றதைநீர்காட்டி யீடேற்றல்
வேண்டு மென்றான். (அ)

அடங்கிய விருத்தியானென் றறிந்தபின்
செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன்னூதுங் குளவியின்
கொள்கை போலத்
தொடங்கிய குருவுமான்ம சொரூபமே
மருவ வேண்டி
உடம்பினுட் சிவனைப்பார்த் துபதேச
மோது வாரே. (சு)

ஐயனே யெனதுள்ளேநின் றனந்தசன்
மங்க ளாண்ட
பெய்யனே யுபதேசிக்க வெளிவந்த
குருவே போற்றி

உய்யவே முத்திநல்கு முதவிக்கோ
ருதவி நாயேன்
செய்யுமா றென்றுங்காணேன் றிருவடி
போற்றி போற்றி. (௰)

சிட்டனிவ் வாறுகூறத் தேசிகர்
மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா வெனவிருத்திக் கிருபையோ
டருளிச் செய்வார்
துட்டமாந் தடைகண்மூன்றுந் தொடரார்மற்
சொரூப ஞான
நிட்டனா யிருக்கினீதே நீசெயு
முதவி யாமே. (௰௧)

## மஹாராஜா துறவு.

இருவரி லரசன் றனக்கறி வோங்க
விருவகைச் சார்வையும் அகற்றிக்
கருவுடற் காவ றனையுங்கை விடுத்துக்
கருத்த சையாது மெய்புணர்வை
மருவிடி லகப்பற் றற்றுமேல் வீடு
வாய்த்திடு மதற்குமெய்ஞ் ஞானக்
குருவரு ளின்றி விளங்கிடா தெனவே
கொண்டனன் மனத்தினிற் றுணிவே. (௧)

## பிரமகீதை.

காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக்
கண்ணொழிந் தொரு பொருளில்லா
மாட்சியை யளிக்க வல்லவன் குருவா
மாரிபோன் மாறு வேண்டாதே
மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும்
வித்தகக் குரவனே யெவருந்
தாழ்ச்சி செய்தேத் தற்குரிய தத்துவமாஞ்
சங்கர னென்றிடத் தருவான். (க)

உடறனது ருவமென் றுணர்ந்து வந்தவன்
றிடவறி வென அருவென்று செப்பிட
வடியிணைமலர் கடந்தக் கணத்தருள்
கடனது வுடையவன் கருணை நன்குரு. (உ)

கரையறு பிறவி வெங்கடலுளே விழுந்
தயர் வுறுது யருழந்தவரை யொவென
விரைவொடு வினைகெட நோக்கி வேதகக்
கரையினை யருள்பவன் கருணைநன்குரு. (ங)

## ஆசாரியரிலக்கணம்.

(சைவசமய நெறி.)

சமய முதனன்குந் தரித்தாரியனும்
சமயநெறி தன்னையுமுன் சார்ந்து. (க)

ஆரியன்பாலன் பாகியாய்ந் தாகமமலைத்து
நேரியவே தாந்த நிலையும். (௨)

தாசனுப்பூசை சமைக்கும் பொழுதமலற்
கேசற வுற்றற்றென தியான். (௩)

அமலனைத்தனுட் கண்டகம் பிரமமென்றே
சமலர்க்குப் பாசந் தடுத்து. (௪)

சாம்பவியாற் சக்தியான் மாந்திரியாற் சத்திபதிந்
தாம்பயத்தின் பேதமா ராய்ந்து. (௫)

வீட்டிமலமூன்று முயிருள்விமலன் பொற்பாதங்
காட்டு மவன்றேசிகனே காண். (௬)

அற்றிடினுமாக்கைக் குறிகள்பொருண் மூன்றுங்
கற்றுணர்ந்தான் றேசிகனே காண். (௭)

குறியுங் குணமு முறினும்மல
வறிவிலன்றான் றேசிகனோ வன்று. (௮)

பிரமோப தேசம் பெறுதலேபாக்கு
கரு மோப தேசங்கழி. (௯)

விடினே குரவன்வினை யினையாரும்
விடுவர் வினையை விரைந்து. (௰)

பெறினும பேதம் பிரமத்துலகத்
துறுதியுனிச் செய்க வினையும். (௰௧)

## அஞ்ஞசாரியரிலக்கணம்.

### சைவசமய நெறி.

அறவுநெடி யனறவுங் குறிய
னறவும் பெரியன வலன். (1)
அறவும் வெளியனறவுங் கரிய
னறவுஞ் செய்யானு மவலன். (2)
சஞ்சன்குணிகூனன் காணனிரு கண்ணுமிலா
னெஞ்சினன் கைபாதி யுறுப்பின். (3)
காக்கைக்கணன்குழிந்த கண்ணனிழி கண்ணனிடர்
நோக்கியுயிர்க் காக்கு மவனும். (4)
பரியவுதடன் பரியபல்லன் பரந்து
முருவழிந்த மூர்க்குடை யானும் (5)
முழங்தாள்குறிய னெடுந்தாளினன் மோட
னமுழுந்தியற நீண்ட வடியான். (6)
பெரியவயிறன பிணிகொள் வயிற
னெரிகுரலன் விக்கலன் சொனீத்து. (7)
நீங்காத வாதநோய்பித்தநோய் நெஞ்சத்தி
னுங்காச நோயு முடையான். (8)
அறவுந்தருண னறவும் விருத்த
னறவு மழ கற்றுனவன். (9)
கோவியவாவனி ரங்காக் குணக்கேடன்
பாவிய மல்லாத துரைப்பான். (10)

மடிவஞ்சனை யன்மறவி பசுநூற்
படிறனுரைக்கும் பயன் பற்றான். (11)

என்றேயிசைத் தவிவை முதலாகும் பழுது
ளொன்றுமிலா ருத்தம ரென்றோர். (12)

(சித்தாந்த தீபிகை.)

வேதியராதி நான்காம்
வெவ்வேறு மனுலோமத்தாற்
சாதிதான் சொல்லினிற் கசடசன்
மாவாகினுங் கேள்
கோதிலா ஞான மின்றேற்
குருவலன் பாசபந்தஞ்
சேதியா வீட்டைக் காட்டுந்
தெளிவிலனாகி லன்றே. (1)

(மெய்ம்மொழி.)

ஆர்த்தன பிறவித் துன்ப
மறுத்தறி வுலகின்மிக்க
மூத்தவர் போனடித்து மூடமா
மனித ரெல்லாந்
தீர்த்திடார் தங்குற்றத்தைச் சிலர்குற்றந்
தீர்க்கும் வண்ணம்
பேர்த்தடியிட மாட்டாதான் பிறர்க்கூன்று
கோலா மாங்கே. (1)

(அமுதசாரம்.)

தயிற்புணர்ப் பாற் கற்பந்
தொடு கடனீராமை
மயிர்ப் படாமின் மினியின்
வன்னி முயற்கோ
டெருத்திற்பான் மெய்யுணர் வில்லாத
தான் பண்ணுங்
குருத் துவ முநேராகக்
கொள். (1)

(அருட்பிரகாசம்.)

மெய்ம் மணமன்றிமுன் சிற்றிலின்
கண்ணொரு மெல்லியலைப்
பொய்ம்மணஞ் செய்தோன் பதியன்றவட்
கெனல் போலுமிறை
செம்மை நெறியறிவிப்பான் குருவன்றித்
தேர்ந்து தம்மி
னம்மயறீர்க் கறியார் குருவோபிறர்க்
காய்ந் திடினே. (1)

---

## ஆசாரிய ரிலக்கணம்.

(சூதசங்கிதை)

ஆடலில் வல்ல பெம்மான் அடியிணைக் கன்பு பூண்டோர்
வாடலில் லாத பத்தி வயக்குறு மெய்மா ணாக்கன்
பாடலின் உறுசீ ராசான் பாலடைந் துபதே சத்தைக்
கோடலின்மரபுசொற்றுங் குருபாரம்பரியஞ்சொல்வாம்

தும்பியு மிஞிறும் வண்டுஞ் சுரும்பரு நிறைந்து பாடப்
பம்பிய முகைவாய் விண்டு பசுநறு வெள்ளம் வாக்கும்
வம்பியல் கடுக்கை மாலை மலிசடை பெருமா னெங்க
ளம்பிகை பாகத் தோனே யாதியா சிரிய னாவான். (உ)

அன்னவ னடிமா ணாக்க னயிர மணிவா யம்பொற்
பன்னகப் பாயன்மீது பயோதரம் போலத் துஞ்சு
மின்னருமணிப்பூண்மாயன் விளம்புமற்றவன்மாணாக்கன்
கன்னலங் குதலைத்தீஞ்சொற்கலைமகண்மணாளன்மாதோ

மொழிதரு மவன்மாணாக்கன் முக்குறும்பெறிந்துசன்மப்
பழிதபுத் துயர்ந்து நின்ற படர்புகழ் சனற் குமார
னிழிவறு மவன்மா ணாக்க னிந்திரியங்கள்செல்லும் (ச)
வழிமனம் போக வொட்டா மாதவ வியாதன் மன்னோ.

மற்றவ னடிமா ணாக்கன் மாதவத்து ளுயர்ந்து ளீர்யா [ர்
னுற்றவென்னால்வேதாந்தவுண்மைநீர்தெரிந்துகொண்ம
குற்றமின்றாக முன்னங்கூறிய படியா சான்பாற் [றோன்
பெற்றநல்லுபதேசத்தைப் பொற்புறப் பெற்றுக்கொண்

பரிந்துதன் குருவின்பாரம் பரியமிவ் வாறேநன்றுத்
தெரிந்தவ ரவர்க்குப் போற்றல் செய்தனன் வருவானுறி
விரிந்தழி தருமஞ்ஞான மேற்றமார் ஞானமுண்டாம்
விரிந்திடு மதனால்வந்து மேவுறு மின்பமுத்தி. (சு)

அறிவுளோர்கள் மேற்கூறிய நூற்களை உற்றுணர வேண்டும் குருவானவர் சீடனுடைய பக்குவத்துக்குத் தக்கபடி அனுக்கிரகம் பண்ணவேண்டும்.

சீடர்கள் குருவினுடைய நிலைமையைத்தெரிந்து குருவாகக் கொள்ளவேண்டும் அப்படிக்கன்றிக் கொள்வதிற்றுன்பமேயன்றி இன்பமுண்டாகாது.

## உதாரணம் வாசிட்டம்

இயற்கைகுணஞ் சோதித்து முன்னேபின்னே
    யாவையுமாம் பிரமம் நீயென்னல்வேண்டும்
வியப்புறவாசையினுழல் வார்க்கிவ்வாறேதின்
    மீளாததீநரகில் வீழ்த்ததாகும்.
இயக்குறுபோகத்தாசை தீர்ந்துபுந்திதெளிந்த
    வுனைப்போல்வார்க்கே நிசமுந்தோன்றும்.
மயக்கமறவுணர்ந்த வல்லகுருவைக்கிட்டா
    வருந்தியுந்தன் பிறப்பறுக்குமகனுமாங்கே.



இன்பங்கிடைக்க வேண்டுமென்பதை யுன்னி தன வைசியர்களில்புத்திமான்களாயுள்ளவர்கள்ஒன்றுசேர்ந்து மாயூரத்தில் சோழியர்வம்சத்தில் சாமிநாதபாகவதரவர்கள் குமாரர் பரமேஸ்பரபாகவதரவர்களை யெங்களுக்குக் குலகுருவாக இருக்கவேண்டுமென்று வேண்டிக் கொள்ள அதர்க்கு அவர்கள் சரியென்று ஒப்புக்கொண்டதின்பேரில் குலகுருவாகக்கொண்டு வழக்கப்படி சிதம்பரத்தலத்திர்க்குப்போய் ஸ்ரீ—மத் அகோரசிவாசாரியார் அவர்களிடம் ஆசாரிய அபிஷேகம்பெற்றுக்கொள்ளும்படிக்கு யேர்ப்பாடுசெய்துபெற்றுக்கொண்டதின்பேரில் வழக்கப்படி திருப்புனவாயில் மடத்திர்க்கு எழுந்தருளச் செய்து உபசரித்தார்கள் திருப்புனவாயிலுக்கு யெழுந்தருளச்செய்தது யாதுகாரணமென்னில் ஷை தலம்மூர்த்தி விசேடம் தீர்த்தவிசேடம் ஸ்தலவிசேடம் உள்ளதாயும் பாண்டிபதிநாலுஸ்தலம்உள்ளதாயும் பாடற்பெற்றதாயும் ஆதியில் அத்தலத்தில் குருவையடைந்ததாயும்இருப்பது பற்றிஅங்கேயிருக்கும்படி செய்தது நம தாண்டவராலும் சிவற்பட்டி முத்தப்ப செட்டியாராலும் பாடலேற்பட்டருக்கிறது பின்பு சாமியவர்கள் பாதரக்குடிக்கு வருவதாவது சொத்தைமுன்னிட்டும் சவுகரியத்தை முன்னிட்டுந்தான் ஷைநகரத்தாரவர்கள் நாளது பரீதாபி-வருஷம் ஆவணி-மீ க-உ காரைக்குடியில் உபதேசம்வைத்து ஷை சுவாமியவர்களை காரைக்குடிக்கு விசையமாகும்படி யேர்பாடுசெய்து அழைத்து

வந்து உபதேசம் நடந்தது அதினுடைய வைபவத்தை ஆதிசேடனாலுங்கூறுதற்கு அருமையாகயிருக்கும்.

---

சீருறும் பரிதாபிவருடமதி லாவணித்
திங்களொன்றுந் தேதியிற்
பாருறுங் காரையம்பதிவந்து
பரமேஸ்பர குருநாதனருளால்
ஏருறுந் தனவணிகருக்குமுயர்
பஞ்சாக்கர மதையியற்றியன்பாய்
தேருறும் வீதிவலம்வந்ததைச்
சேடனுஞ் செப்புதற்கெளிதாகுமே.

---

திருப்புன வாயிலிருந்
தெழுந்தருளித்திகழுறு காரையம்பதிக்கு
விருப்பமாய்ப்பரமேஸ்பரகுருநாதன்
விசயமாய்த் தனவணிகருக்கே
யருடரும் பஞ்சாக்கரமதையருளி
யன்புடன் சிவிகையிலேறித்
தெருடருந் திருவோலக்கமானதவை
செப்புதலென்றனக் கெளிதோ.

---

## பக்குவா பக்குவம் நோக்காததற்கு பரணி

செறிதரும் பிறவிமுறிய வந்திறைவர்
திருவிளங்கு கழலருளுநாள்
அறிஞரென்று மிலர் அவலரென்று
மிலர் அவர்சுதந்தரமதடையவே.

## காலநோக்குதற்கு திருவாசகம்

காலமுண்டாகவே காதல்செய்துய்மின் கருதரிய
ஞாலமுண்டானொடு நான்முகன் வானவர்நண்ணரிய
ஆலமுண்டானெங்கள்பாண்டிப்பிரான் றன்னடியவற்கு
மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்துமுந்துமினே.

---

## பச்குவத்துக்கு தக்கபடி திகழுமேன்பதற்கு வைராக்கிய தீபம்

வதுவைநாள்மறையோர்வழங்கி யாத்திரையின்மற்றருந்ததியை நோக்குதலின் இறவு மொன்றெனத் தம்முடல் பொருளாவி யீயுமெம்போலிகடமக்கும் குதிரைகொண்டிடவன் றடைந்துடலாதி கொடுத்தவன் போற்கொடுப்பவாக்கும் பொதுமைபுற்றிலனோர் மாணிடனருளுய்த் திகழுமப் பூரண புராணன்.

## உபதேசக் கிரமம் வாதவூரார்புராணம்.

### ஆசாரியர்.

கருப்புக நினையார்தம் மேற்கண்ணருள்செய்து நெஞ்சிற் பரப்பற மிதித்தல் வேண்டியெடுத்த பொற்பாதங் கொண்டு, திருப்புனை மறையோர் போற்ற தில்லையம்பலத் தேநின்ற, வருட்பரா நந்தவாரியாத வினதற் கிசைந்-தார்.

### சீடன்

வந்துநான் வருமையுற்றேன் மாற்றெனதிலம்பாடென்று, சிந்தையாகுலமுற்றுன்கை செழும்பொருளீதல் செய்வார்க், கிந்தநாளளிக்கவேண்டு மெனவிதியின்மை யாலே; யந்தநாளிந்நாளாக வடிமைகொண்டருளவெண்ணி.

### கோயில்.

முன்னவன்புகன்றவாறு முயல்குவமென்றேயந்த,
மன்னுறுதவத்தின்மிக்கார் வகைமலர்த்தெரியலானும்
பொன்னிடையழுத்திமுத்தம் புனைந்தபல்பட்டினானு
மந்நெடுங்காவினூடங்கான பூங்கோயில்செய்தே.

### ஆசனம்.

செய்தநற்கோயிலூடு சிறந்தவாசனமுஞ்சேர்த்து
மெய்தருந்தொண்டர்க்கெல்லா மிக்கவரிறைவர்ச்சார்ந்து [ரார்.
கைதவமுடையார்நெஞ்சிற் கனவிலும்காணதில்லா
மைதருகளத்தாய்கோட்டஞ் சமைந்ததுவாய்ப்பவென்.

அபிஷேகம்.

இங்கிவர்தம்மையாளுங் காலமீதென்றுதெய்வ
சங்கமதகன்றுமுன்னேன் மஞ்சனச்சாலைசார்ந்து
குங்குமம்புழுகுசாந்தங் குழைத்துமெய்ம்முழுதும்பூசிக்
கங்கையினன்னீர்வாசங் கலந்தமென்பனிநீராடி.

வஸ்திராபரணம் அலங்கரித்தல்.

மெய்ப்புனறகிலான்மாற்றி விலைமதிப்பில்லாநல்ல
வொப்பருஞ்செய்பட்டாடையுடுத்துயர்கோட்டமெய்தி
செப்பிளமுலைநாள்பாசன்றென்றிசையதனைநோக்கி
யப்பெருந்தவிசின்மேலங் கழநூறவிருந்தபின்னர்.

சீடனுபசரித்திருத்தல்.

அண்டருமலர்தூயேத்து மன்பருந்தூநீராடி
வெண்டுகில்புனைந்து நீறுவிளங்கியமெய்யராகி
முண்டகமலர்த்தாள்வைத்து முத்திதந்தருளமேனி
கொண்டவர்திருமுன்சென்று குறுகியங்குவகைகூர்ந்து.
கற்றைவெண்கவரிசெம்பொற் காம்புநீடாலவட்டம்
பற்றியன்புடனேவீசிப் பரிவுடனடியார்சூழப்
பொற்றவிசிடையேமேவும் புண்ணியன்றிருமுன்பைம்
போதுற்றகையுடனேவாத வூரரங்கிருந்தபின்பு.

## கிருபாநோக்கம்.

மந்திரம்பதங்கள்வன்னம் புவனங்கடத்துவங்க
ளைந்துநற்கலைகளென்னு மறுவகையகற்றியந்தச்
சிந்தனைக்கரியமேலைச் சிவத்துடனறிவுசேரப்
பந்தனையொழிவார்தம்மேற் பரிந்தருட்பார்வைசெய்து.

## உபதேசம்புரிதல்.

(வேண்டி.)
எவர்க்குமெய்ஞ்ஞானமாமைந் தெழுத்தையுமுணர்த்த
பவத்தொழிலகற்றியாளுஞ் சிவத்தைமுன்னாகமாறித்
தவப்பெருவடிவங்கொண்டார் தண்டமிழ்ப்பாடுமன்பர்
செவிப்புலன்வழியேசிந்தை யுறத்திருவாய்மலர்ந்தார்.

## உடல்பொருள்ஆவி மூன்றுங்கொடுத்தல்.

என்னதாக முன்னினைந் துளபொருளு மில்லாதாகிய வுடலமும்யானு, நின்னவாக நின்னருள்கொடு நினைந் தேனின் மலாவென நின்று நின்றருகா, மன்னுதானை தன்மேலணிகலன் கன்மதுரைமீனவன் வான்பொருளி றையோன், முன்னதாக வைத்திறைஞ்சின ரறஞ்சேர் முதல்வனார் முகமலர்வு கொண்டிருந்தார்.

சத்துவிசயமாய்ச் சிலவுசெய்தல்-

பெருந்துறையுறைவாரன்புபெருந்திருவடியராகி
யிருந்தவர்தம்மின்மேன்மையெய்தினர்முகத்தைநோக்கி
திருந்தியபொருளிதெல்லாந்திருப்பணிக்களியுமேலா
மருந்தவர்க்குதவுமில்லாதலந்தவர்க்கருளுமென்றார்.

---

தனவைசியர்கள் கேட்கா நின்ற உபதேசமானது மேற்கூறிய புராணத்தினது சாராம்சமாய் இருப்பதால் ஷை புராணத்தை விரிவாய் எடுத்துச் சொன்னது ஷை புராணத்தின் கருத்தின்படியே பூராவும் அநுஷ்டித்து வந்தால் மிக்க அழகாயிருக்கும் பெரியவாளுடைய அநுஷ்டானமும் நூற்களினுடைய கருத்தும் பின்னுள்ளவர்கள் நடக்கவேண்டிய நன்மையைக் கருதித்தான் மாணிக்கவாசகமூர்த்தி உடல் பொருளாவி மூன்றுங்கொடுத்ததுபோல நம்மால் கொடுக்கக் கூடுமோவென்றால் அது அவதார மூர்த்தி அதினுடைய அதிதீவிரபக்குவம் நமக்கு வந்தால் குடுக்கக்கூடும் பக்குவத்துக்குத்தக்கபடியேற்படுமிப்போது கிடைத்திருக்கிற பரமேஸ்பர சிவாசாரியாரவர்கள் வைராக்கியாதி குணங்களுடன்பால்யத்திலேயே சமஸ்கிரதத்திலும் தமிழிலும் சங்கீதத்திலும் ஆங்கிலேய பாஷையிலும் பாண்டித்தியம் வந்திருப்ப

தால் நாளுக்குநாள் விருத்தியபஸ்த்துக்கு வரக்கூடும் அப்படிவருவதில் தனவைசியர்களுக்கு மிக்கக்ஷேமத்தை யுண்டாக்கும்.

## ஆண்டவர்வாக்கு.

சுத்தலக்ஷியமான சத்தாகியேகமாய்ச்
 சொல்லரிய சின்மயத்திற்
றோன்றுநின்மலசத்தி சகசீவபரமதாய்த்
 தோன்றுமதி ஞானவிதப்
பெத்தமுறுபாவனை யிலிற்றைவரைவினைப்
 பிறந்திறந்தெய்த்து விட்டேன்
பெறலறியவுன்கருணை பெற்றுநானுவிதப்
 பிராந்தியது தீர்வதென்றோ
புத்தமேமுத்தமே சத்தியமேயானந்த
 போதமே பொன்னுலகுநேர்
புகழுந்திருப்புனவை வாசனேயடியர்துதி
 பொன்முத பரமகுருவே
மத்தனேனென்துமதி நின்பாதவனசத்தில்
 வைத்திடுவ தெந்தநாளோ
வணிகர்குலவோஷதி கடமையவுபதேசமழை
 மாறாது பொழியுமுகிலே

## முத்தப்பசெட்டியார் வாக்கு.

அஞ்செழுத்தை யுட்செவிப் போரல்லுமபசுலு பெரீனா நெஞ்சில்விட்டு நீங்காத நின்னையத்தா ரஞ்சிதமாய்த்

திருமாற்கடிமை செய்வோர்தெய்வமெல்லாமொன்றேன்
றுரிமையுடன் போற்றிவளருத் தமர்கள் இருகிதியம்
வேண்டினருக்குதவி மிக்ககன்த்தைப் பெற்றோர்
பாண்டி நாட்டாசான் பதம்பணிவோர் நீண்டபுகழ்த்
தேசாதிபர் புகழுஞ் செய்யதிருப்புனவை
யாசான் கமலத்தடிபணிவோர் நேசமுடன்
அன்னைதந்தை தெய்வமுதலா சானைப்போற்றுதலாய்
மன்னவரைக்கூடவணங்காதார்

சூக்மபஞ்சாக்கரத்தைத் தூய்தான
வணிகருக்குச் சுலபமாக
ஆக்கமதுவுண்டாக வனுக்கிரம்
புரிகின்ற வையன்றன்னை
ஊக்கமுளகாயத்தால் உடசரித்து
முப்போது முண்மையாக
வாக்கினற்றுதித் திறைஞ்சிமனதி
னுற்றியானித்து வாழ்கமாதோ.

16-வது பக்கத்தில் அகோரசிவாசாரியார் மட
நச்சுவாமிகள் வழியராகவுமென்றிருப்பதை சோழி
ராகவுமென்று கொள்ளவேண்டியது.

முற்றிற்று.

